## உரிமை



## நூல் விபரம்

**நூலின் பெயர்:** இந்திய ஒன்றியம் 360 (சிறுகதை) | **ஆசிரியர் :** கருவெளி ராச.மகேந்திரன் | **விலை :** 23 வது பக்கத்தை பார்க்கவும் | **வகை :** இபுத்தகம் | முதல் பதிப்பு : மார்ச், 2019

**Book Name :** Indhiya Ondriyam 360 (Sirukathai) | **Author :** Karuveli RaSa. Mahendran | **M.R.P. :** Check Page Number 23 | **Category:** EBook | First Edition : March, 2019

## வடிவமைப்பு மற்றும் வெளியீடு

ரா.மகேந்திரன், கருவெளி கலையகம் (a) Karuveli Creatives , தேனி -625531

karuveli.mahendran@gmail.com | **94455 28556** | **https://www.karuveli.wordpress.com**

அனைத்து

ஜீவன்களுக்கும்

சமர்ப்பணம்

# அறிமுகம்

அன்புடையீர் அனைவருக்கும் என் அன்பார்ந்த வணக்கம். கடந்த ஆண்டு எழுதப்பட்டு நீங்க வாசித்து மாற்றங்களை நிகழ்த்திய உண்மைச் சம்பவங்களின் அடிப்படையில் எழுதப்பட்ட சிறுகதைகளிலிருந்து இச்சிறுகதை சிறிது மாறுபட்டது. அதுவும் மிக முக்கியமான, நம் வாழ்வை தினமும் திசை மாற்றிக் கொண்டிருக்கிற விசயத்தை, தன்னுள் சுமந்து வருவதால் இதனை மாறுபட்டது என்றே கூறலாம். புதிதாக என் படைப்புகளை வாசிக்கத் துவங்குவோருக்காக கதை சொல்லியின் கதையோடு இக்கதை துவங்குது. “இந்திய ஒன்றியும் 360” நம் வாழ்வில் பெரும் மாற்றத்தைக் கொண்டு வரும் என்ற நம்பிக்கையுடன் இக்கதையை எழுதி உங்களிடம் கொண்டு வந்து சேர்க்கிறேன். இதனை ஒரு தொடர் போல எழுதலாம் என்ற எண்ணமும் எனக்குள் இருப்பது உண்மை தான். காலம் வரும் போது இது பற்றி மேலும் பகிர்கிறேன்.

2019 ஆம் ஆண்டின் முதல் சிறுகதை என்பதாலும் இக்கதை சிறப்பைப் பெறுகிறது. 2019 ன் மூன்றாவது படைப்பு என்பதாலும் இது சிறப்பைப் பெறுகிறது. ஏனெனில் முதல் அடி எடுத்து வைக்காமலே பின் வாங்கிய கூட்டம் இருக்கிறது, அவர்களைத் தாண்டி முதல் அடியில் பின் வாங்கிய கூட்டம் இருக்கிறது. அவர்களையும் விஞ்சி இரண்டாம் அடியில் பின்வாங்கிய கூட்டம் இருக்கிறது. அவ்வகையில் பார்த்தால் முயற்சியில் மூன்றாம் அடியில் காலடி எடுத்து வைப்பவர்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவு. உண்மையைச் சொல்லப் போனால் அதனையே முதல் அடி என்றும் கூறலாம், ஏனென்றால் முதல் இரண்டடி கையிருப்பு போல் அதனை செலவு செய்வது அல்லது பயன்படுத்துவது நமது விருப்பம். ஆனால் மூன்றாம் அடி நீங்கள் உருவாக்கிச் செய்ய வேண்டியது. அந்த வகையில் இரண்டாம் அடிக்கு பிறகு வந்தாலும் இந்த மூன்றாம் அடியும் முதல் அடியே. அதற்குப் பின் வரும் ஒவ்வொரு அடியும் முதல் அடியாகிவிடுகிறது என்பதே உண்மை. நான் ஒவ்வொரு முறையும் அந்த முதல் அடி எடுத்து வைக்கும் உணர்வுடன் என் முதலடி கையிருப்பையும் மனதில் வைத்து முன்னேறுகிறேன் என்பது வாசகர்களாகிய உங்களுடன் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டிய இரகசியம் தான்.

வாருங்கள்! இணைந்து பயணிப்போம்!!
இந்திய ஒன்றியம் 360 நாம் இணைந்து பயணிப்பதற்கான விதையை விதைத்திடும் என்ற நம்பிக்கையுடன்

கருவெளி ராச.மகேந்திரன்

# கதை சொல்லியின் கதை

அந்த நாள் எனக்கு வழக்கமான நாள் போல் இல்லை. ஏறக்குறைய என் ஆயுட் காலத்தில் மூன்றில் இரண்டு பங்கினை வாழ்ந்து முடித்திருந்தேன். அந்த இரண்டு பங்கில், நான் என்னை அறியா குழந்தைப் பருவமும், அதனைத் தொடர்ந்து எனக்குக் கிட்டிய பனிரெண்டு ஆண்டுகள் பள்ளிப் படிப்பும் அதனை முடித்த கையோடு நான்கு ஆண்டு கல்லூரி படிப்பும், அப்படிப்பும் அகிலமெல்லாம் பொருளாதார நெருக்கடியிலிருக்கும் காலகட்டத்தில் முடிய பல போராட்டங்களுக்குப் பின் ஒரு சிறு நிறுவனத்தில் அடிப்படைத் தேவைகளைக் கூட பூர்த்தி செய்ய இயலா வருமானத்துடன் பணி, அதனைத் தொடர்ந்து ஓராண்டு அரசு நிறுவனத்தில் பயிற்சி பணியாளராய் அதனை விடக் குறைந்த சம்பளத்தில் பணி, நல்ல பணியுடனே வீடு திரும்புவேன் என்ற சூளுரையுடன் தமிழ் நாடு விட்டு வெளியேறுதல், வெற்றியே சாத்தியமில்லை என்னும் மக்களிடமிருந்து மீண்டு சிந்தை மாற்றி சிறப்பாய் இந்திய ஒன்றியத்தின் மேற்குப் பகுதியை ஆட்டிப் படைக்கும் மும்பையில் உலகை உலுக்கிய இரண்டாம் உலகப் போருக்கு சொந்தக்காரர்களான நாட்டினர் துவங்கிய கும்பெனியில் ஓர் பணியை பெற்று துவங்கிய அந்தப் பயணம் திரும்பி பார்க்கவோ நின்று யோசிக்கவோ நிமிடங்களில்லாமல் தொடர்ந்தது என்றால் அது பொய்யில்லை.

இதோ இந்த நாளுக்கும் என் பிறப்பிற்குமிடையே இத்தனை நிகழ்வுகள் நிறைந்து கிடந்திருந்தன. இதில் இந்திய ஒன்றியத்தின் 99% மக்களின் வாழ்க்கை பிரதிபலிக்கும். ஆனாலும் இந்த நாள் இன்னொரு புதிய அத்தியாயத்தை துவங்குவதற்கான நாள் என்று என் நெஞ்சம் துடித்துக் கொண்டிருந்தது. அதிகாலையே எழுந்து மூன்று மணி நேரத்திற்கு மேலாகவும் அந்தத் தகவல்களை மீண்டும் மீண்டும் பார்த்துக் கொண்டேன். பாரத பூமி என மார் தட்டிக் கொள்ளும் இந்திய ஒன்றியம் மட்டுமல்லாமல் பரந்து விரிந்த பார் முழுவதையும் பணம் ஆட்சி செய்து கொண்டிருக்கும் இந்தக் காலத்தை ஒவ்வொருவரும் ஒவ்வொன்றாய் சொல்லி அழைத்துக் கொண்டிருக்க நான் தனியே ஏதேனும் பெயர் சொல்லி அழைக்க விரும்பவில்லை.

நான் பார்த்துக் கொண்டிருக்கும் கணக்கு இன்றைய நிகழ்விற்கு முக்கியமானதாக அமையப் போகிறது என்று எனக்கு நன்றாகத் தெரிந்தே அப்பணியைச் செய்து கொண்டிருந்தேன். பல ஆண்டுகள் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்திப் பணியில் இருந்து விட்டு திடீரென அப்பணியிலிருந்து ஓய்வை அறிவிக்கவில்லை, அது பற்றிய தகவல்களை ஆறேழு ஆண்டுகளுக்கு முன்பே என் குடும்பத்திற்கும் சுற்றத்திற்கும் அறிவித்தது தான். ஆனாலும் அது இன்றைய நிகழ்வை நிகழ்த்துவதற்காக எடுத்த முடிவில்லை.

என்னைப் பற்றிய தகவல்கள் அத்தனை அவசியமில்லை என்றாலும் கதை சொல்லும் கதாபாத்திரம் யாரென்றே தெரியாமல் கதை வாசிப்பது அத்தனை சுவாரசியமாய் இருக்காது என்பதாலும் மேலும் இந்த பூமியில் கதைகளுக்கு இருக்கும் மதிப்பில் ஒரு சதவிகிதம் கூட நிகழ்வுகளுக்கும், உண்மையென்றும் சத்தியமென்றும் உரக்க நாம் கத்தும் எந்த செயல்களுக்கும் இல்லவே இல்லை என்பதனை அறிந்த பின்பும் இந்த நிகழ்வை கதையாக்காமல் கதாபாத்திரமாகாமல் என்னதான் செய்வது?

## வெட்கக்கேடு எனக்கு

இந்திய ஒன்றியத்தின் தலையெழுத்தா? இல்லை இந்த உலகத்தில் பெரும்பாலான மக்களின் தலையெழுத்தே அப்படியோ? என்ற வினா என் உறக்கத்தை திருடிக்கொண்டே இருந்தது. அது கிடக்கட்டும், நேற்று மாலையே பேசியபடி எங்கள் பகுதியின் முக்கியப் புள்ளிகளில் ஒருவரும் இந்த நிகழ்வுக்கு வருவதாகக் கூறி இருந்தார். இன்னும் பலரும் வரக்கூடும் என்பது எனது யூகம். நானும் இதுவரை பேசாத பலரிடமும் இந்நிகழ்விற்கு வரும்படி கேட்டுக் கொண்டிருந்தேன். இந்நிகழ்வே இம்மக்களின் வாழ்வை தினமும் திசை மாற்றிக் கொண்டிருக்கிறது என்பதால் அனைவரும் பங்கேற்க வேண்டும் என்று நினைத்தேன். ஓரிரு வாரங்களுக்கு முன்பே இன்று காலையும் நேற்று மாலையிலும் இரவும் இடைவிடாது துருவித் துருவிப் பார்த்துக் கொண்டிருந்த தகவலை அவர்களுக்கு அனுப்பியும் வைத்திருந்தேன். இது வெறும் துவக்கமெனத் தெரியும். ஏறக்குறைய மூன்றில் இரண்டு பங்கு ஆயுளை இழந்து விட்ட பின்பு என் வாழ்வை நான் வாழும் பகுதியை நித்தமும் பாதித்துக் கொண்டிருக்கும் இந்த நிகழ்வுக்கு முதன் முதலாய் செல்வதென்பது வெட்கக் கேட்டிலும் வெட்கக் கேடு, அதனால் என்ன செய்ய? அதற்கான பழியை என்னைத் தவிர யார் மேலும் நான் சொல்லிவிட முடியாது அது முழுவதும் உண்மை இல்லை என்ற போதும்.

வெட்கம் முன் வந்து என்னைத் தடுத்தாலும் ஒருமுறை கூட இந்த நிகழ்வுக்குப் போகாமல் மண்ணில் புதைந்து போன தீயில் எரிந்து போன மக்கள் வாழ்ந்த இப்பூமியில்; என்னிலும் குறைந்த ஆயுட்காலமே எஞ்சியிருக்கும் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் இருக்கும் இப்பூமியில்; இனியும் கால தாமதம் செய்வதே பாவமென புறப்பட்டேன். கையோடு தகவல்களை எடுத்துச் செல்வதென நேற்றே அந்த முக்கிய நபருடன் பேசி இருந்தேன். அவரும் அதனை அச்சிட்டுக் கொண்டு வருவதாய் சொல்லி இருந்தார். எட்டி எட்டிப் பார்த்தேன் பக்கத்து வீடு தான் என்றாலும் காலையிலேயே சுறுசுறுப்புடன் சுழலும் அவரை இதுவரைக் காணோம். மறுபடியும் தகவல்களை துண்டுத் தாள்களில் குறித்துக் கொண்டேன்.

எந்தத் தயாரிப்பும் இல்லாமல் நிகழ்வுக்குச் செல்வதால் எந்தப் பயனுமில்லை என்பதனை எத்தனையோ பள்ளி, கல்லூரி பரீட்சைகளிலும் அலுவல் சந்திப்புகளிலும் அனுபவமாய் அறிந்து பெற்றிருந்ததாலேயே இத்தனை தயாரிப்புகளும். அவருக்காக காத்திருந்து காத்திருந்து காலம் கை நழுவிப் போவதாய் தோன்றியது. நடந்தால் நிகழ்வு துவங்குவதற்குள் சென்று விடலாம். எதிர் வீட்டுக்காரரை அழைத்தேன் அவர் தனக்கிருக்கும் பணிச்சுமையைச் சொன்னார். அந்தச் சுமை இந்திய ஒன்றியத்தின் அனைவரின் மேலும் அதிகமாகவே தூக்கி வைக்கப் பட்டு விட்டதோ? என்ற வினாவுடன் நடக்கத் துவங்கினேன்.

## ஆண்ட்டி இண்டியன்

அது சரியான நேரமென்றே நினைக்கிறேன், மக்கள் பிரச்சனைகளுக்குத் தீர்வுகளைக் கேட்பதால் எங்கள் பகுதியின் பிரச்சனைக்காரராய் அரசு அல்லது அதிகார வட்டத்தில் அடையாளம் காணப்பட்டவர் அதே நிகழ்வுக்காக வழக்கம் போல் தனது இரு சக்கர வாகனத்தில் பறந்து கொண்டிருந்தார். அவருடன் இணைந்து அந்த நிகழ்வுக்காக பயணிப்பது எதிர்பாராத ஒன்றுதான் ஆனாலும் அது நிகழ்ந்து விட்டது.

ஒவ்வொரு நிகழ்வும், செயலும் இன்னொரு நிகழ்வுக்கான, செயலுக்கான விதைகளை தன்னிடத்தில் சுமந்து கொண்டே தான் நிகழ்கிறது. இதனை நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ.. நான் முழுவதுமாய் நம்புகிறேன். அந்த நிகழ்வு நிகழும் இடத்திற்கு, இதற்கு முன்பு இரண்டோ அல்லது மூன்று முறையோ நான் சென்றிருக்கக் கூடும் என்பது என் நினைவு. பணி நிமித்தமாக ஊரு விட்டு, மாநிலம் விட்டு, நாடு விட்டு வெளியில் சுற்றும் ஒவ்வொருவருக்கும் நிகழ்வது தான் எனக்கும் நிகழ்ந்து கொண்டிருந்தது. ஆகையால் நானும் நீங்களும் ஒன்று தான். இன்றைய மொழியில் சொல்வதென்றால் அந்த “Anti Indian” உடன் பேசிக் கொண்டே சென்றதில் இடம் வெகு விரைவில் வந்து விட்டது. மிகவும் மகிழ்ச்சியான செய்தி என்னவென்றால் அந்த நிகழ்வுக்கு எங்களுக்கு முன்பே பல மக்கள் வந்திருந்தார்கள்.

வீட்டிலிருந்து புறப்படுவதற்கு முன்பே ஒரு பார்வையாளனாக இருந்து விட்டு திரும்பும் நோக்கமே மேலோங்கி இருந்தாலும், என்னை நானே தயார்படுத்திக் கொண்ட நிகழ்வு ஏதோ ஒரு நிகழ்வுக்கான விதையை தன்னுள் கொண்டிருக்கிறது. அந்த விதை அக்கணத்திலேயே முளைக்கத் துவங்குமா? அதை அறியாமல் தான் நானும் மக்களோடு மக்களாய் அங்கு சென்று அமர்ந்து விட்டேன்.

# அந்த நிகழ்வு

அந்த நிகழ்வு எப்படி நிகழுமென பல கதைகளை கேட்டிருந்தாலும் அனுபவப் பூர்வமாக உணருதல் வேறு. நினைத்துப் பாருங்கள், 130 கோடி மக்களும் பங்கேற்கும் ஒரு நிகழ்வில் பங்கேற்றல் எப்படி இருக்குமென்று? இத்தனை காலமாக அந்த அனுபவத்தை தொலைத்ததற்காக என்னை நானே கடிந்து கொண்டேன். அதற்கான நேரமில்லை. ஒற்றர்களைப் போல் அங்குமிங்குமாய் சுற்றித் திரிந்தவர்களை பார்த்த போது தான் எனக்கு கொஞ்சம் அச்சமாய் இருந்தது. இறுதியில் அந்த நிமிடம் நெருங்கி விட்டது. அந்நிகழ்வின் ஒருங்கிணைப்பாளர் தானே எழுந்து சென்று அந்த ஒற்றர்களிடம் ஏதோ உரையாடினார். பிறகு தான் எனக்குப் புரிந்தது அவர்கள் அரசின் சார்பில் வந்திருக்கும் அதிகாரிகளென. அவர்களை விடுங்கள், அவர்களுக்கு இன்னும் பல இடங்களுக்குச் செல்ல வேண்டிய அவசரம் போல், என் அப்பத்தா சொல்வது போல் காலில் சுடுதண்ணிய ஊத்திக்கிட்டு நின்னுருந்தாங்க. ஒருங்கிணைக்கும் அதிகாரிக்கு எதையோ சொல்லி அனுப்பி வைத்தார்கள். உண்மையைச் சொல்வதென்றால் அவரிடமிருந்து சில தகவல்களை வாங்கிக் கொண்டார்கள். என் யூகம் சரி என்றால் அவர்களின் பணியே அதுவாகக் கூட இருக்கலாம்.

மக்கள் கூட்டத்தைப் பார்த்ததும் எனக்குள் பெரும் நம்பிக்கை பிறந்து விட்டது. அதிலும் கட்சிக் கொடியோடு, பொறுங்கள் பொறுங்கள் வெவ்வேறு கட்சிக் கொடி போட்ட துண்டுகளோடு சிறு சிறு துண்டுக் குழுவாக அமர்ந்திருந்தார்கள். அவர்களைப் பற்றி சொல்வதற்கு முன்... ஆண்கள் கூட்டத்தை விட பெண்கள் கூட்டம் கொஞ்சம் அதிகமாக இருந்தது கண்டு நான் மெய் சிலிர்த்துப் போனேன். என் எண்ணங்கள், நம்பிக்கைகள், உறுதி அத்தனையும் சின்னா பின்னமாகும் நேரம் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுமென எனக்குத் தெரியாது. மக்களும் மக்களாக வரவில்லை அவரவர் பகுதி சங்கங்களாக வந்திருந்தார்கள். அவர்களை குறை சொல்ல முடியாது, அரசிடம் சென்று தனியாய், குடிமகனாய், குடிமகளாய் கேள்வி கேட்பது நடக்கவே நடக்காது என்ற எண்ணத்தை யாரோ எல்லோருடைய மூளையின் மூலைகளில் விதைத்து உரம் (உயிர்க் கொல்லி) போட்டு, ஆர்.ஓ. நீர் ஊற்றி வளர்த்து விட்டிருக்கிறார்கள். கொஞ்சம் பொறுங்க.. எங்க பகுதியை சேர்ந்த சங்கத்தார்கள் யாரையும் காணோம். எங்கள் பகுதி ஆண்ட்டி இண்டியன் இருக்கிற தைரியம் எனக்கு கொஞ்சம் அதிகமாகவே இருந்துச்சு.

கூட்டம் துவங்கி விட்டது, அங்கு இருக்கிறாரா? இல்லையா? என்று அறியாத ஒருவரின் பெயரும் பதவியும் சொல்லி. ஒரு வேளை அது நிபந்தனையாகவோ.. சட்டமாகவோ.. பழக்கமாகவோ.. இருக்கலாம். ஒருங்கிணைப்பாளர் தான் துவங்கினார் வரவேற்புடன். 130 கோடி இந்திய ஒன்றிய குடிமக்களும் ஒரே சமயத்தில் பங்கேற்கும் ஒரே நிகழ்வு இதுவாகத்தான் இருக்குமென நம்புகிறேன். வேற்றுமையில் ஒற்றுமை என உரக்கக் கூறும் இந்திய ஒன்றியத்தின் ஒற்றுமை இது போன்ற நிகழ்வுகளால் தான் இன்னும் சாத்தியமாயிருக்கிறது. முன்பு என்னைப் போன்று இன்றும் இந்த நிகழ்வை புறம் தள்ளி விட்டு வெவ்வேறு பணிகளில் தங்களை இணைத்துக் கொண்டிருக்கும் மக்கள் எல்லாம் இன்றைய என்னைப் போல் மாறிட அவர்களுக்கும் ஒரு வாய்ப்பை இந்த ஒன்றியம் ஏற்படுத்துமா? அந்தக் கேள்வி திடீரென என் முன் தோன்றி என்னை நிலைகுலையச் செய்தது. அதுவும் ஆண்டிற்கு நான்கு முறை நிகழும் இந்த நிகழ்வை பற்றி அறியாதவர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதே இந்த ஒன்றியத்தின் நிலையைச் சொல்லி விடும்.

## மய்யம்

கூட்ட நிகழ்வைப் பற்றி கூறுவதற்கு முன் என் மனதில் பெரும் நம்பிக்கையை உருவாக்கியது இடையில் கூட்டமாய் வந்த "மக்கள் நீதி மய்யம்" என்ற புதுக் கட்சியின் துண்டுகள் அணிந்து கொண்டு வந்தோர். அவர்கள் வெளியெல்லாம் செய்திருந்த விளம்பரத்தைப் பார்த்து மய்யத்தின் தலைவரின் வழிகாட்டுதலில் இந்த நிகழ்வில் பெரும் பங்காற்றுவார்கள் என நம்பி என் கைக்குறிப்புகளை எனது சட்டைப் பையில் வைத்தேன். பாவம் நான். சில நிமிடங்களில், அவர்கள் குழுவாய் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டது என் கையை மீண்டும் என் கைக்குறிப்புகளைத் தேட வைத்தது. அவர்கள் புகைப்படங்கள் எடுக்கையில் சுதந்திரத்திற்குப் போராடிய கட்சியின் உறுப்பினர் உயிரைப் பிடித்துக் கொண்டு புகைப்படத்தில் தோன்றாமல் இருக்க பின்னாடி நகர்ந்து வந்தார்.

ஒருங்கிணைப்பாளர், கைகளில் வைத்திருந்த காகிதத்தில் இருந்து தீர்மானங்களை வாசிக்கத் துவங்கினார். முதல் தீர்மானமே எனது கைக்குறிப்பு பற்றிய தீர்மானம், மிகவும் மகிழ்ச்சியோடு எனது தயாரிப்பினை மீண்டும் எனது சட்டைப் பையில் வைத்து விட்டேன். அவர் வாசிக்கும் ஒவ்வொரு தீர்மானங்களும் அற்புதம். அந்த நீண்ட தீர்மானப் பட்டியலை வாசித்து முடித்து விட்டு மக்கள் தேவைகளை அவர் கேட்டுக் கொண்டதின் பெயரில் மக்களும் அவரவர் பகுதி தேவைகளைக் கூறத் துவங்கினார்கள். கிராம அதிகாரியும், தலையாரியும் அங்கு தன் இருந்தார்கள் என்பது கூடுதல் தகவல் எனக்கு.

நான் என் பகுதி கிராம அதிகாரியையும் தலையாரியையும் தெரியாமல் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். அந்த தீர்மானங்களில் பல எப்படி நிகழுமென என்னால் யூகிக்கக் கூட முடியவில்லை. யார் அந்த விசயங்களை அந்த அதிகாரிகளிடம் தீர்மானமாக்க வேண்டியிருந்தார்கள்? அல்லது அவர்கள் கள ஆய்வு செய்து அந்த தீர்மானங்களை உருவாக்கினார்களா? அத்தீர்மானங்கள் பற்றி விளக்கமளிப்பார்களா? கேள்விகள் எனக்குள் பல்கிப் பெருகிக் கொண்டே இருந்தது. அது எனக்கு நல்லதல்ல. நானறிவேன். எனக்கு மட்டுமல்ல என்பதே உண்மை.

கவனத்தை திசை திருப்ப, இடது புறம் திரும்பி எங்கள் பகுதி புரட்சியாளரை நோக்கி நம் பகுதிக்கான தேவைகளை கூறலாமே என்று கேட்டேன். எனக்கு என்னவாயிற்று, என் கண்ணில் பட்டது உண்மையா? அங்கு கொஞ்ச தூரத்தில் அமர்ந்திருப்பவர்கள் யாவரும் நான் எந்த நேரம் கிராம பஞ்சாயத்திற்கு சென்றாலும் அங்கிருப்பவர்கள். ஆம் அங்கிருந்த கூட்டத்தில் பலர் குத்தகைதாரர்கள், அரசு வேலைகளை எடுத்துச் செய்யும் ஆட்கள், அட அங்கு தான் தூய்மைப் பணியாளர்களும் நின்றிருந்தார்கள். நம்ம புரட்சியாளர் கேட்பதற்குள், உங்கள் பகுதிக்கான என பட்டியலிட்டு தேவைகளைச் சொல்லி ஒருங்கிணைப்பாளரே முடித்துக் கொண்டார். இதில் தீர்மானமான பிரச்சனை எது? தீர்மானமாக எழுதப்படாத பிரச்சனை எது? வாய் திறந்து பேசவே கூடாத பிரச்சனை எது? இது எதுவும் தெரியாமல் அங்கு நான் அமர்ந்திருக்கிறேன். யாரோ ஒரு பெண் அதிகாரி கையில் வைத்திருந்த நோட்டில் எழுதிக் கொண்டே இருந்தார். ஆனால் ஆளுக்கொரு மிட்டாயைக் கொடுத்து ஏற்கனவே ஒரு கையேட்டில் (வந்தவர்களுக்கான வருகைப் பதிவேடாக இருக்கலாம் ) கையொப்பம் வாங்கும் பணியும் நடந்து கொண்டிருந்தது.

## அய்யகோ ! கேட்டுவிட்டேன் !!

ஒவ்வொரு பகுதி மக்களாக தங்கள் பகுதி தேவைகளை சொல்லிச் சொல்லி அமர்கிறார்கள். முதல் தீர்மானமாக நிறைவேறியதும் எனது கைக்குறிப்பேட்டில் இருப்பதுமான எங்கள் கிராம பஞ்சாயத்தின் நிதி நிலை அறிக்கையைப் பற்றி விளக்குமாறு வாய் திறந்து கேட்டு விட்டேன். இவர் பேசியதும் சொல்கிறேன் என்று ஒருங்கிணைப்பாளர் பதில் சொல்லி விட்டார். காத்திருந்தேன். அனைவரும் தண்ணீர் கேட்டார்கள், சாக்கடை வசதிகள் பற்றி கேட்டார்கள். சிலர் அங்கன்வாடி வேண்டுமென்றார்கள். எல்லாம் நல்லாத் தான் போயிட்டு இருந்தது. இரண்டாம் முறையாக நிதி நிலை அறிக்கை பற்றி நினைவு படுத்தினேன். இப்பகுதி மக்கள் பேசி முடிக்கட்டும் சொல்கிறேன் என்றார்.

நான் முட்டாள் என்று எனக்கு நன்றாய் தெரியும், மக்கள் வார்த்தைகளை நான் அப்படியே நம்பி விடுவேன். ஏனென்றால் என் வார்த்தையைக் காப்பாற்ற என்னைத் தவிர வேறு யார் தான் பொறுப்பு என்ற அடிப்படை நோக்கில் செயலாற்றும் ஆள் நான். அதனால் பயன் என்ன? பல முறை, பல இடங்களில் வேறுபாடுகள் இன்றி அனைவராலும் ஏமாற்றப்பட்டிருக்கிறேன். அதற்காக நான் துவண்டு விடுவதும் இல்லை, மாறி வேறு வழியில் சென்று விடுவதும் இல்லை. வந்திருந்த பெரும் மக்கள் கூட்டத்தில் முக்கியமாக பெண்கள் கூட்டம் அவ்விடம் விட்டு கொத்தாக கிளம்பியது. அதற்கும் மேல் என்னால் பொறுத்திருக்க இயலாமல் மூன்றாம் முறையும் கேட்டு விட்டேன். ஆனால் இந்த முறை இன்னொரு வேண்டுகோளுடன், ஆம் நீங்கள் சொல்லுங்கள் இல்லையேல் அனுமதி இருந்தால் என்னிடம் இருக்கும் தகவல்களை பகிர்கிறேன் என்பது தான் அந்த வேண்டுகோள்.

நான் சற்றும் எதிர்பாரா விதமாக நீங்கள் சொல்லலாமென அனுமதியும் தந்து விட்டார். இதற்கிடையில் அந்தந்த பகுதி மக்கள் சங்கப் பிரதிநிதிகள் சொன்னது போல் எங்கள் பகுதி மக்கள் பிரதிநிதியும் வந்து தேவைகளைச் சொல்லிச் சென்றார். பொது இடங்களில் பேசுவதற்கென ஒரு தனி வகையை நம் மக்கள் தொடர்ந்து பின்பற்றுவது மிகவும் ஆச்சர்யமாக இருக்கிறது. அந்த ஆச்சர்யத்திற்கு காரணம், எந்தக் காரணத்திற்காக அந்த நிகழ்வு என்பதனை மறந்து அவர்கள் பேசுவதால் எனக்கு ஏற்படுகிறது. அதனால் யாருக்கென்ன? விட்டொழியுங்கள். இதோ இன்னும் ஒரு சில நிமிடங்களில் இந்திய ஒன்றியத்தின் 130 கோடி மக்களும் வருடத்திற்கு நான்கு முறை கூடி அவர்கள் நாட்டின், வாழ்வின் தலையெழுத்தை மாற்றி எழுதும் நிகழ்வில் நான் முதல் முதலாக சில தகவல்களைப் பகிரப் போகிறேன் என்பதே எனக்குள் ஏதோ செய்தது.

## பகிர்தலே வாழ்வு

பாதி கூட்டம் ஏற்கனவே சென்று விட்டதால், ஒ! கூட்டம் என்றதும் தான் நினைவுக்கு வருது. அங்கு வந்திருந்த பெண்கள் கூட்டத்திற்காக நான் முன்பு பெருமைப் பட்டேன் அல்லவா? (நினைவிருக்கா?! ) அது அவசியமற்றதென கொத்தாய் எழுந்து போன போது அறிய முடிந்தது. ஆம்! அவர்கள் அனைவரும் நூறு நாள் / கிராமப்புற வளர்ச்சி திட்டப் பணிகளில் தினக்கூலியாக பணி செய்பவர்கள். அவர்கள் தினக்கூலிகள் என்பதால் நான் அவசியமற்றதென சொல்லவில்லை. அவர்கள் வரவில்லை, வரவழைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதால். எனது எண்ணம் அத்தனையும் சரியாக இருக்க வேண்டுமென்ற அவசியம் ஏதுமில்லையே. இது தவறாகக் கூட இருக்கலாம். ஆனால் தகவல் உண்மை. நான் வழவழ கொழகொழவென பேசும் பழக்கமுடையவனில்லை. நான்காவது முறையாக நினைவு படுத்த நான் அங்கு பேச வாய்ப்பளிக்கப்பட்டது.

நான் தகவல்களை பகிர்ந்து கொள்வதற்கு ஏதேனும் உள் நோக்கம் இருக்குமோ என நீங்கள் அந்த ஒருங்கிணைப்பாளர் பின்பு கூறியது போல் இப்போதே நினைக்கக் கூடும். அதில் தவறொன்றும் இல்லை. எனக்கு உள் நோக்கம் கிடையாது, நேரடியான நோக்கம் மட்டுமே இருந்தது. இந்தத் தகவல் மக்களுக்கு மிக மிக முக்கியமானது அதை அவர்கள் அறிந்திருக்க வேண்டும் என்பதே அந்த நோக்கம். அதனால் என்ன நிகழும் என்பது அந்த அந்த மக்களைப் பொறுத்தது என்பதனை நான் நன்கு அறிந்து கொண்டே, புரிந்து கொண்டே அந்த தகவல்களை பகிரத் துவங்கினேன்.

## கவனம் தேவை இக்கணம்

உங்கள் கவனத்தினை இன்னும் கொஞ்சம் குவித்துக் கொள்ளுங்கள். இப்போது நான் பகிரவிருக்கும் தகவல்கள் உங்களுக்கும் மிகவும் முக்கியமான தகவலே. எனது பஞ்சாயத்திற்கும் உங்கள் பஞ்சாயத்திற்கும், கிராமத்திற்கும், நகரத்திற்கும், மாநகரத்திற்கும் எந்த தொடர்பு இல்லாதது போல் தோன்றினாலும் இவை அனைத்தும் இணைந்தே இந்திய தேசிய ஒன்றியம். ஆகையால்.. நான் உங்கள் கவனத்தை குவித்துக் கொள்ளச் சொல்வதற்குத் தேவையான அத்தனை உரிமையும் எனக்கு இருக்கு.

பாதியாக குறைந்து விட்ட மக்கள் கூட்டத்தின் முன் எழுந்து வந்து நின்று விட்டேன். கல்லூரி காலத்தில் முதன் முதலாய் மேடையேறிய போது என் உடல் நடுக்கத்தை, என் இதயத் துடிப்பை, எனது குரலை நானே கேட்டிருக்கேன். அதற்குப் பின் பல்வேறு கும்பெனிகளில் பலரின் முன் பல பேச்சுகளையும், பள்ளிகள் மற்றும் கல்லூரிகள் என பல மேடைகளைக் கண்டு விட்ட போதும் சில நொடி அச்சம் வந்து செல்லத்தான் செய்தது. அந்த அச்சமே எனக்கு "வினையூக்கி" அதுவே என் கவனத்தை மீண்டும் செயலின் மீது கொண்டு வந்து சேர்க்கிறது. பேசத் துவங்கி விட்டால் பின்பு நான் நானாக இருக்கப் போவதில்லை அங்கு இருக்கும் மக்களாக மாறி விடுவேன். எங்கிருந்து துவங்குவது?

வாழ்த்துகளிலிருந்து துவங்கினேன், பணியிலமர்ந்து சில மாதங்களிலேயே சிறப்பாக பணியாற்றும் ஒருங்கிணைப்பாளருக்கான வாழ்த்துடன் துவங்கினேன். அனுமதி வழங்கியதற்காக நன்றியுடன் துவங்கினேன். தேனி மாநகராட்சியுடன் ஒப்பிடுகையில் சிறப்பாக நிதியை கையாண்டு இருப்பதற்காக வாழ்த்துகள் தெரிவித்தபடி துவங்கினேன் (நான் ஒன்றும் நிதி மேலாண்மையில் வல்லுனர் இல்லை என்பதனை நினைவில் கொள்க).

## ஊஞ்சாம்பட்டி நிதி நிலவரம் 2018 –19

2018–19 நிதி ஆண்டின் ஆரம்பத்தில் ஊஞ்சாம்பட்டி (தேனி மாவட்டதில் உள்ளது) கிராம பஞ்சாயத்தின் கையில் பணமாக ஏறக்குறைய 98 ஆயிரம் ரூபாயும் அதன் வங்கிக் கணக்கில் 75 லட்சத்திற்கு சற்று அதிகமாக இருந்தது எனச் சொல்லி முடிக்கையில் பெரும்பாலான மக்கள் நிமிர்ந்து அமர்ந்திருந்தார்கள். அந்த நிதி ஆண்டின் முடிவில் 41 ஆயிரம் கையிலும் வங்கியில் ஏறக்குறைய 90 லட்சமும் இருந்தது என்றதும் சில பெருமூச்சுகளையும் கேட்டேன். ஒருங்கிணைப்பாளர் மிகவும் அமைதியாக கவனித்துக் கொண்டிருப்பதாய் உணர்ந்தேன். கிராம அதிகாரியும், தலையாரியும் எனக்கு மிக அருகில் தான் அமர்ந்திருந்தார்கள். இந்திய ஒன்றிய அரசு, பஞ்சாயத்தின் வரசு செலவுகளை மக்களுக்கு வெளிப்படையாக கொண்டு வரும் நோக்குடன் துவங்கப்பட்டுள்ள இந்த முயற்சி மிகவும் வரவேற்கத்தக்கதும் பாராட்டத்தக்கதும் ஆகும். ஆனால் அந்தத் தகவல் இருப்பதை மக்களிடம் கொண்டு போய் சேர்க்கும் பணியை யார் செய்வார்கள்? என்று தான் எனக்குத் தெரியவில்லை. இருந்தாலும் இந்தச் செயலில் எனது பங்களிப்பு இருக்கும் என்பதனை மட்டும் உறுதி செய்து கொண்டேன்.

செலவுகளைப் பற்றிச் சொல்வதற்கு முன் வருமானங்களைப் பற்றி சொல்லி விடலாமென முடிவு செய்து சொல்லத் துவங்கினேன். அதைச் சொல்வதற்கு முன் உங்களிடம் ஒரு கேள்வி, **உங்கள் பஞ்சாயத்தின் நிதி நிலவரம் ( வரவுகள் மற்றும் செலவுகள்) உங்களுக்குத் தெரியுமா?**

தொழில்முறை வரியாக 3.2 லட்சமும், வீட்டு வரி மற்றும் வீடுகளற்ற மற்ற கட்டிங்களுக்கான வரி மூலமாக முறையே 3.47 லட்சமும், 6.24 லட்சமும் வருமானமாகக் கிட்டியிருந்தது. ஏறக்குறைய 9 ஆயிரம் விளம்பரம் சம்பந்தமான வரிகளாகவும் இதே பிரிவில் மற்ற வரிகளாக ஏறக்குறைய 3 லட்சமும் காட்டப்பட்டிருந்தது. வங்கி கையிருப்பின் வழியே வட்டியாக 1.6 லட்சம் கிடைத்திருந்தது. (இப்படி ஒரு வருமானத்தை தேனி மாநகராட்சியில் கண்ணில் கூடக் காட்டவில்லை) பஞ்சாயத்திற்கு சொந்தமான சொத்தை விற்றதில் 500 ரூபாய், ஆரோக்கியம் மற்றும் குடும்ப நலம் என்ற தலைப்பின் கீழ் நோயளிகள் மற்றும் வேறு வழிகளில் கிட்டிய பணமென 17.7 ஆயிரம், நீர் வரியாக 96 ஆயிரம், அதே தலைப்பின் கீழ் கட்டணம் மற்றும் அபராதமென 2.7 லட்சம், விவசாய விரிவாக்கம் என்ற பகுதியில் 78 ரூ. இதை கேட்க கேட்க எவ்வளவு வியப்பாக உள்ளது. 78 ரூபாய் கூட கணக்கில் வந்திருக்கிறதென்பது எத்தனை நல்ல விசயம். மிகவும் நீளமாக செல்வதைப் போல் தோன்றினாலும் மிகவும் சுருக்கமான தகவலே இது. நான் எழுத்துகளில் உரைப்பதால் காலம் செல்கிறது.

இன்னும் கவனமாய் இருங்கள். இப்போது நான் சொல்லவிருக்கும் தகவல் ஏறக்குறைய அனைத்து கிராமப் பஞ்சாயத்திற்கும் மிக முக்கியமான மிகப்பெரிய வருமானம், இது நகராட்சி, மாநகராட்சிகளுக்கு இன்னும் பல மடங்காக இருக்கும். இந்தத் தகவலை சொன்ன உடனே மக்கள் என்னிடம் சொன்ன வார்த்தைகள் இது தான் "உடனே செலவு கணக்குகளை சொல்லுங்க". அந்த தொகை அப்படி..

கிராம பஞ்சாயத்து ராஜ் என்ற தலைப்பின் கீழ் மாவட்ட நிதியாக மூவாயிரமும், கிராம பஞ்சாயத்து நிதியாக 40 லட்சமும், உதவித் தொகையாக அல்லது நிதியாக மத்திய அரசிடமிருந்து 38 ஆயிரமும் மாநில அரசிடமிருந்து ஏறக்குறைய 40 லட்சமும் வரவாகக் காட்டப்பட்டிருந்தது. இது தவிர இன்சூரன்ஸ் மற்றும் பென்சன் டிபாசிட் என அரசுப் பணியிலிருப்பவர்களுக்கென 1.6 லட்சமும் வரவாகக் காட்டப்பட்டிருந்தது. ஆக மொத்தம் முந்தைய கையிருப்பு தவிர **1 கோடியே 1.6 லட்சத்தை** வருவாயாக கணக்கில் கொள்ளலாம்.

நாம் அனைவரும் பல லட்சம் கோடிகளை ஏற்கனவே கேட்டு விட்டதாலும், சில ஆயிரம் கோடிகளை தினசரி ஊழலாகவும் கொள்ளையாகவும் தினமும் கேட்டுக் கொண்டே வருவதாலும் இந்தத் தொகை மிகப் பெரியதாய் தெரியாது. இன்றைய நிலவரப்படி இத்தொகை உங்கள் ஒருவரின் சொத்தாகக் கூட இருக்கலாம். அதனாலென்ன அது அத்தனையும் நமது வரிப்பணம் என்பது நினைவில் இருந்தால் சரி. வரிப்பணம் செலுத்தாமல் ஏமாற்றுபவர்கள் பற்றிப் பேச்சே இல்லை. அவர்களை விட்டு விடுங்கள் அவர்கள் நம் உடலில் இருக்கும் புற்றுக் கட்டிகள் போன்றோர்கள்.

## செலவு என்றாலே பிரச்சனை தான்

நான் அடுத்த பக்கத்தை என் கைக் குறிப்பேட்டிலிருந்து திறப்பதற்குள் மக்கள் செலவு கணக்கை சொல்லச் சொல்லி குரல் எழுப்பத் துவங்கி விட்டார்கள். நிச்சயமாக அதில் சிலர் அரசியல் கட்சிக்காரர்கள். ஆச்சர்யம் என்னவென்றால் அவர்களில் சிலர் ஆளும் கட்சிக்காரர்கள். செலவு கணக்குகளை சொல்வதற்கு முன் என் மனதில் இந்த விசயத்தை சொல்லிவிட வேண்டுமென்று உறுத்திக் கொண்டிருந்த ஒரு விசயம் உண்டென்றால் அது இது தான், ஏறக்குறையை 98% பணிகளுக்கு திட்ட மதிப்பீடு என எத்தொகையும் குறிப்பிடவே இல்லை. அதையும் சொல்லி விட்டே மேலும் சொல்லத் துவங்கினேன். அதில் மிகப் பெரிய செலவாகக் குறிப்பிடப் பட்டிருந்த செலவுகள் பின்வருமாறு இருந்தன

- மின்சாரம் வாங்கிய செலவு 28.5 இலட்சம்,
- நீர் விநியோகம் மற்றும் சாக்கடை வசதிகளுக்கென ஏறக்குறைய 25 லட்சத்திற்கும் அதிகமான செலவாகவும்,
- பஞ்சாயத்து ராஜ் திட்டப்பணிகளுக்காக 12.5 லட்சம்,
- முதன்மை சுகாதார மையத்திற்கென 10 லட்சமும்,
- புதிய தெருவிளக்குகள் மற்றும் தெருவிளக்குகள் புணரமைப்பு, சப்ஸ்டேசன் பராமரிப்பு என மொத்தமாக 2.60 லட்சமென்றும்,
- நீர்ப்பாசன திட்டத்திற்கு 1.7 லட்சமென்றும்,
- பொது நூலகத்திற்கான செலவு 1 இலட்சம்,
- பொது சொத்துகளை பராமரிக்க 70 ஆயிரம்,
- சாலை மற்றும் கல்வெட்டுகளுக்கென 42 ஆயிரம்
- அங்குமிங்குமென சில ஆயிரங்கள் செலவாய் குறிப்பிடப்பட்டிருந்தன

ஆக மொத்தம் 83 இலட்சம் செலவுகளாய் குறிக்கப்பட்டிருந்தது. எத்தனை மகிழ்ச்சி, ஏறக்குறைய 80% த்திற்கும் அதிகமான வருவாயை பயன்படுத்தி விட்டார்கள். கூடுதல் தகவல் என்னவென்றால் நான் முன்பு வசித்து வந்த தேனி மாநகராட்சியின் கணக்கு வழக்குகளை ஒரு ஒப்பீட்டுக்காக எடுத்து பார்த்து நானே வியப்படைந்து கொண்டது தான் மிச்சம். அதற்காகத் தான் இந்த பஞ்சாயத்து பணியாளர்களுக்கு நன்றியுடனும் வாழ்த்துகளுடனும் என் உரையைத் துவங்கினேன்.

## புதிய துவக்கம்

உங்களுக்கு நினைவு இருக்கிறதா என்று எனக்கு நினைவில் இல்லை. வந்திருந்த மக்கள் அல்லது மக்கள் பிரதிநிதிகள், சங்கங்கள் அனைவரும் கேட்பது என்னவென்றால் நீர் மற்றும் சாக்கடை வசதிகள் தான். எங்கையோ இடிக்குதுல! நான் முடிக்கும் போது அங்கு கொஞ்சம் கோபமும் தகவல்களை அறிந்து கொண்ட திருப்தியும் மக்களிடம் நிலவியது. மின்சாரம் வாங்கியதாய் நான் குறிப்பிட்டிருந்த தொகை மிகக் குறைவென ஒருங்கிணைப்பாளர் கூறினார். அவர் சொல்வது உண்மையாக இருக்கலாம். ஆனால் அது சட்டப்படி குற்றமாக அமையுமென அறியாமல் சொல்கிறாரா? அல்லது மற்ற செலவுகளைப் பற்றி மக்கள் கேள்வி எழுப்பக் கூடும் என்பதால் கேட்கிறாரா? அதனை நான் அறியேன். அவர் பணிக்கு வந்து சில மாதங்களே கடந்திருப்பதால் அவரிடம் அவ்வாறு உரைப்பதை தவிர்க்கும்படி வேண்டிக் கொண்டேன். நல்ல நேரம் செய்தித்தாள்களே, நிருபர்களோ யாருமில்லை அங்கே.

நல்ல பணிகளை பாராட்டும் அதே நேரம் தவறுகள் நிகழ்ந்திருந்தால் அதனை சரி செய்து கொள்வதற்கு உதவுவதும் தான் நல்ல சமூகத்தை கட்டமைக்க உதவும். அறிந்தே அத்தவறுகளை திரும்பத் திரும்பச் செய்பவர்களிடம் சமாதானம் ஏதும் செய்யத் தேவையில்லை அதுவும் நினைவில் இருக்கட்டும். நான் பேசி முடிக்கையில் அல்லது தகவல்களை சொல்லி முடிக்கையில் அங்கு பெரும் கரவொலியோடு நன்றியும் என்னை வந்து சேர்ந்தது. அதுவல்ல என் நோக்கமென எனக்கு நன்றாய்த் தெரியும்.

அந்த நிகழ்வு முழுவதும் கிராம அதிகாரி அமைதியாய் இருந்தது பெரும் ஆச்சர்யமளித்தது. அவர் மிகக் குறைந்த வயது இளைஞர், தனியே பேசிய போது ஊருக்கு பல நற்காரியங்கள் செய்யத் துடித்திருப்பதாகவே கூறினார். இப்பணிக்கு வந்து எட்டு ஆண்டுகளானதென்றார், அதற்குள் அவர் எத்தகைய மாற்றங்களுக்கு ஆளாகியிருப்பார் என்பதனை என்னால் உணர முடிந்தது. அனைத்து பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பேசிவிட்டு கீழே இறங்கும் போதோ, அந்நிகழ்வுகள் முடிந்ததும் வெளியேறும் போதோ நிகழ்வது போலவே பலரும் என் கைபேசி எண்ணை வாங்கிக் கொண்டார்கள். இங்கிருந்து புறப்பட்டதும் அவரவர் உலகத்திற்குள் அவரவர் புகுந்து விடுவார்கள் என்பதறிந்தே அவர்களிடம் எண்ணைப் பகிர்ந்து கொண்டு நகர்ந்தேன். தானே ஊர் தலையாரியென அறிமுகம் செய்து கொண்டவர், தம்பி தகவல்களை சரியாய் சொன்னீர்கள். எனக்கே இந்தத் தகவல்கள் தெரியாதென வெள்ளந்தியாகச் சொன்னார். அப்படிச் சொல்லித் தான் என் மனதை சமாதானம் செய்து கொள்வேன் நான். ஒருங்கிணைப்பாளர் தர முயற்சிக்கும் எந்தப் பதிலும் அங்கு யாருக்கும் சமாதானமாகாது என அறிந்த பின்னே, அவரிடம் விளக்கம் கேட்பது அத்தனை சுலபமான காரியமில்லை. இது துவக்கம் என்பதால் நல்ல துவக்கமாக இருக்கட்டுமென அந்த அனுபவத்துடன் அங்கிருந்து நடக்கத் துவங்கினேன். நடு வானில் கதிரவன் என் நிழலை எனக்குள் விழச் செய்து கொண்டிருந்தான்.

## தீட்டுகள் நிறைந்த பழைய பூமி

விடுதலைச் சிறுத்தைக் கட்சியின் பிரமுகர் எனக்கு இன்னொரு புதிய பிரச்சனையை அறிமுகம் செய்தார், உண்மையில் அது புதிய பிரச்சனையல்ல என்பது எனது நினைவறைகளைத் தேடிப் பார்த்து நான் கண்டு கொண்டேன். அப்பிரச்சனை, நூறு நாள் பணியின் போது அப்பணிக்கு வரும் பணியாட்களில் (பெண்களில்) பலர் தங்களை உயர்ந்த சாதியெனக் கருதும் எண்ணத்தால் அதே நூறு நாள் பணிக்காக தினக்கூலியாய் வரும் பெண்களை பேசும், நடத்தும் விதங்களில் காட்டப்படும் வன்முறை பற்றியது தான்.

இந்திய ஒன்றியத்தின் மிகப்பெரிய புற்று நோயாய் இருக்கும் சாதிப்பிரச்சனைகளைக் கேட்காமல், காணாமல், அனுபவிக்காமல் எந்தக் கிராமத்திலும், நகரத்திலும், மாநகரத்திலும், கல்விக் கூடங்களிலும், அலுவலகங்களிலும், கோவில்களிலும் நீங்கள் வாழ்வை வாழ்ந்து விட முடியாது. 40 அல்லது 45 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்ததாக என் தாய் சொன்ன நிகழ்வுகளை இன்றும் கேட்கையில் இத்தேசத்தில் பிறப்பெடுத்ததற்காக நான் வெட்கித் தலைகுனிவதைத் தவிர வேறு வழியில்லை எனக்கு. வெட்கிக் குனிந்த தலையோடு தான் நடந்தேன். சமீபத்தில் கொலை செய்யப்பட்ட ராகவி பற்றியும் அவரிடம் கேட்டறிந்து கொண்டு அதே வலிகளுடன் நகர்ந்தேன்.

கிராம சபைக் கூட்ட ஒருங்கிணைப்பாளரின் வேண்டுகோளுக்கிணங்க கிராம அலுவலகம் சென்று ஒரு சில வார்த்தைகள் பேசி விட்டு அங்கிருந்து புறப்பட்டேன். தானே வாகனத்தில் வந்து விடட்டுமா? என்று கருணை காட்டினார் ஒருங்கிணைப்பாளர். நன்றி கூறிவிட்டு நான் புறப்பட்டேன். சுவரெல்லாம் "கிராமசபை கண்ட நம்மவரே" சுவரொட்டிகள். உள்ளுக்குள் சிரித்துக் கொண்டே நடக்கத் துவங்கினேன். தூய்மைப்பணியாளர் ஒருவர் எதிர்பட்டு தம் நிலை சொன்னார். அத்தகவல்கள் இன்னும் என்னால் சரிபார்க்கப் படவில்லை, ஆனாலும் நீங்கள் சரிபார்த்தும் சொல்லலாம். கிராம பஞ்சாயத்தில் பணியாற்றும் ஒரு துப்புரவு பணியாளரின் ஊதியம் மாநகராட்சியில் அதே பணியைச் செய்யும் பணியாளரின் சம்பளத்தை விட மிக மிகக் குறைவு என்பது தான் அத்தகவல். அத்தோடு அவர் சொன்ன வார்த்தை, எங்கள் சங்கங்கள் இணைந்து போராடிய போதும் அரசு அதனை தீர்க்காத போது உங்களைப் போன்ற தனி நபரிடம் சொல்வதால் என்னதான் நடக்கப் போகுது. அது அரசுப் பணி என்றால், எனது கேள்வி இது தான் அரசுப்பணி புரியும் அதிகாரிகள் கிராமம், நகரமென பணிபுரியும் இடத்தைப் பொறுத்து அதிகமான ஊதிய வேறுபாடுகளுடன் பணி புரிகிறார்களா என்ன? பார்க்கலாம் அண்ணா... நான் என்னால் ஆனதைச் செய்கிறேன் என்றபடி அங்கிருந்து புறப்பட்டேன். என் கண் முன்னே கடந்த ஆண்டு மட்டும் ஒரு லட்சம் செலவு செய்யப்பட்ட நூலகம், அதன் முகப்புக் கூரையோ உடைந்து போய் விழுந்து விடத் தயாராய் இருந்தது.

## 360

நான் அமைதியாக, மிக அமைதியாக அந்த மாபெரும் நிகழ்வில் பங்கேற்று விட்டு திரும்பிக் கொண்டிருந்தேன். ஆம் அன்று சனவரி 26, 2019 தேனியிலிருப்போருக்கு பல்வேறு பயிற்சியளிக்கும் திட்டமிட்டிருந்த என் மனதில் இந்தப் பயிற்சி மிகவும் அவசியமெனப் பட்டது. தேனிக்கு மட்டும் போதுமா? தேனி மாவட்டம் முழுமைக்கும் என்றது என் ஆழ்மனது. அது பதில் சொல்லிக் கொண்டிருக்கையில் இன்னொரு வினா.. தமிழகத்திற்கு? அதுபற்றி யோசித்து முடிக்கும் முன்னே.. இந்திய ஒன்றியத்திற்கு? என்றது. என் மூளையின் பள்ளமேடுகள் வேலை செய்யும் விதம் சில சமயம் பைத்தியக்காரத்தனமாகத்தான் இருக்கும். அந்தப் பைத்தியக்காரத்தனத்தில் பிறந்தது "**தேனி 360**'' அடுத்து "**தமிழ்நாடு 360**'' அடுத்து "**இந்திய ஒன்றியம் 360**''.

**"தேனி 360''** ன் திட்ட இலக்கு, வரும் 2030 ஆம் ஆண்டுக்குள் தேனி மாவட்டத்தில் இருக்கும் ஒவ்வொரு குடும்பத்திலும் குறைந்தது ஒருவரேனும் அவர்கள் பஞ்சாயத்தின் நிதி நிலவரத்தை பார்க்கத் தெரிந்தவர்களாகவும், அதனை புரிந்து கொள்ளத் தெரிந்தவர்களாகவும் அது பற்றி தெரியாதவர்களுக்கு விளக்கத் தெரிந்தவர்களாகவும் இருக்க வேண்டும்.

**"தமிழ்நாடு 360''** ன் திட்ட இலக்கு, வரும் 2035 ஆம் ஆண்டுக்குள் தமிழ்நாட்டின் ஒவ்வொரு பஞ்சாயத்திலும் குறைந்தது ஐந்து நபர்கள் அவர்கள் பஞ்சாயத்தின் நிதி நிலவரத்தை பார்க்கத் தெரிந்தவர்களாகவும், அதனை புரிந்து கொள்ளத் தெரிந்தவர்களாகவும் அது பற்றி தெரியாதவர்களுக்கு விளக்கத் தெரிந்தவர்களாகவும் இருக்க வேண்டும்.

**"இந்திய ஒன்றியம் 360''** ன் திட்ட இலக்கு, வரும் 2035 ஆம் ஆண்டுக்குள் தமிழ்நாட்டின் ஒவ்வொரு பஞ்சாயத்திலும் குறைந்தது ஐந்து நபர்கள் அவர்கள் பஞ்சாயத்தின் நிதி நிலவரத்தை பார்க்கத் தெரிந்தவர்களாகவும், அதனை புரிந்து கொள்ளத் தெரிந்தவர்களாகவும் அது பற்றி தெரியாதவர்களுக்கு விளக்கத் தெரிந்தவர்களாகவும் இருக்க வேண்டும்.

அடப்பாவி! எதோ, கிராம சபைக் கூட்டத்திற்குப் போனோமா வந்தோமான்னு இல்லாம.. இது என்னா திட்டம் என்கிறீர்களா? நான் முன்னவே சொன்னேனே, எனக்கென்ன எனக்கென்ன என்று எல்லோரும் ஒதுங்கிக் கொண்டால் மாற்றங்கள் நிகழாது. முக்கியமாக நமக்கான நல்மாற்றங்கள் நிகழாது.

அதன் முதல் கட்டமாக, ஆய்வின் படி தேனியில் மட்டும் வரும் 2031ல் ஏறக்குறைய 16.2 லட்சம் மக்கள் வாழ்வார், அப்படியானால் நான்கு லட்சம் பேருக்கு பயிற்சி தர வேண்டும். தனியாளாக முடியாது தான். ஒரு நாளில் ஒரு கோடி பார்வையாளர்களைத் தாண்டும் காணொளிகள் இருக்கு. ஆம், இப்பயிற்சிகள் **"ஊமைகளின் குரல்", "கருவெளி ராச.மகேந்திரன்", "கருவெளி மியூசிக்கா"** என எனது அனைத்து யூடியூப் சேனல்களிலும் வரவிருக்கிறது. அக்காணொளி முடிவில் அப்பயிற்சியை / தகவலை அறிந்து கொண்டவர்கள் பயிற்சியை பெற்றுக் கொண்டமைக்கான படிவத்தை பூர்த்தி செய்யலாம். இத்தகைய முதல் முன்னெடுப்பு பல நபர்களிடம் தகவல்களை கொண்டு சேர்க்கும்.

அது மட்டுமின்றி, தொடர்ந்து என் இல்லத்தில் நிகழ்ந்து வரும் பயிற்சி வகுப்புகளில் இப்பயிற்சியும் இணைத்துக் கொள்ளப்படும். இணைந்து செயலாற்ற விரும்புவோர் இங்கிருப்பார்களே என்று நம்புகிறேன். அவசியம் தேவை என்றால் பின்வருபவைகளையும் உருவாக்கும் திட்டம் உள்ளது

- இந்திய ஒன்றியம்360 அல்லது தேனி360 க்கு ஒரு தனி இணையதளம்
- இந்திய ஒன்றியம்360 க்கு ஒரு app ( அது தேவையான தகவல்களை பயனாளர்களுக்குப் பகிரவும், பயிற்சி முடித்ததும் அவர்கள் குறித்த அடிப்படைத் தகவல்களை பெற்றுக் கொள்ளும் திறன் வாய்ந்ததாக இருக்க வேண்டும்)
- பயிற்சி வழங்க விரும்புவோருக்கும், நிறுவனங்களுக்குமான தகவல்கள்
- பல்வேறு வடிவங்களில் இத்தகவலை மக்களிடம் கொண்டு சேர்ப்பதற்கான தொடர் முயற்சிகள்.
- தகவல் காணொளியை பல மொழிகளிலும் மொழி பெயர்த்தல்

என்னடா.. இது சுவாரசியமா ஒரு கதை படிச்சிட்டுப் போகலாமுனு வந்தா.. பெரிய பொறுப்பைக் கொடுக்கிறானேனு நினைக்கத் தோன்றினால் அதில் தவறில்லை. இதோ... இதுவரை நாம் பேசிய விசயங்களில் சில தயாராய் இருக்கின்றன உங்களுக்காக... அதற்கு முன் நான் பகிர்ந்து கொண்ட ஊஞ்சாம்பட்டி கிராம பஞ்சாயத்தின் 2018–19 நிதி நிலவரம் இதோ..

State: TAMIL NADU Gram Panchayat: Unjampatti

ANNUAL RECEIPTS AND PAYMENTS ACCOUNTS

Financial Year: 2018-2019

| RECEIPTS | | | | PAYMENTS | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| HEADS OF ACCOUNT | | Budget Estimates (Rs.) | Amount Actuals (Rs.) | HEADS OF ACCOUNT | | Budget Estimates (Rs.) | | | Amount Actuals (Rs.) | | |
| | | | | | | Plan | Non Plan | Total | Plan | Non Plan | Total |
| | Opening Balance<br>Cash in Hand:<br>Balance in Bank:<br>Balance in Treasury:<br>Balance in PostOffice: | | <br>98821<br>7511162.8<br>0<br>0 | | | | | | | | |
| Part-I PANCHAYAT FUND | | | | Part-I PANCHAYAT FUND | | | | | | | |
| Revenue Account-Receipts | | | | Revenue Account-Payments | | | | | | | |
| **0028** | **Taxes on Profession, Trades etc.** | | | **2049** | **Interest Payments** | | | | | | |
| 101 | Profession Tax | 0 | 324805 | 101 | Interest on Provident Fund | 0 | 0 | 0 | 0 | 2829 | 2829 |
| **0035** | **Taxes on Property other than Agriculture Land** | | | 103 | Interest on Other Deposit and Accounts | 0 | 0 | 0 | 0 | 4098 | 4098 |
| 101 | Property Tax on Residential Building | 0 | 346556 | **2059** | **Maintenance of Community Assets** | | | | | | |
| 102 | Property Tax on Non-Residential Building | 0 | 623708 | 101 | Maintenance and Repairs | 0 | 0 | 0 | 0 | 63360 | 63360 |
| **0045** | **Taxes on Duties and Commodites** | | | 102 | Furnishing | 0 | 0 | 0 | 0 | 7940 | 7940 |
| 102 | Advertisement Tax | 0 | 8750 | **2205** | **Art, Culture and Libraries** | | | | | | |
| 104 | Receipts under Other Acts | 0 | 289285 | 102 | Public Liraries | 0 | 0 | 0 | 0 | 100098 | 100098 |
| **0049** | **Interest Receipts** | | | **2210** | **Health and Family Welfare** | | | | | | |
| 101 | Interest on Bank Deposit | 0 | 156341 | 101 | Primary Health Centres | 0 | 0 | 0 | 0 | 1059183 | 1059183 |
| **0075** | **Other Miscellaneous Receipts** | | | 102 | Community Health Centres | 0 | 0 | 0 | 0 | 7980 | 7980 |
| | | | | | | | | | | | |
| 102 | Sale of land and Property | 0 | 500 | **2215** | **Water Supply and Sanitation** | | | | | | |
| **0210** | **Health and Family Welfare** | | | 101 | Maintenance of Water Supply line | 0 | 0 | 0 | 0 | 1436635 | 1436635 |
| 101 | Receipts\Contribution from Patients and Others | 0 | 17697 | 102 | Maintenance and Repair of Tube-wells | 0 | 0 | 0 | 0 | 63950 | 63950 |
| **0215** | **Water Supply and Sanitation** | | | 103 | Sewerage and Sanitation | 0 | 0 | 0 | 0 | 96380 | 96380 |
| 101 | Receipts from Water Supply Schemes | 0 | 9622 | 800 | Other Expenditure | 0 | 0 | 0 | 0 | 781492 | 781492 |
| 102 | Fees, Fines etc. | 0 | 273107 | **2405** | **Fisheries** | | | | | | |
| **0435** | **Agriculture including Agriculture Extension** | | | 104 | Developmental Schemes | 0 | 0 | 0 | 0 | 23100 | 23100 |
| 101 | Crop Husbandry | 0 | 78 | **2515** | **Panchayati Raj Programmes** | | | | | | |
| **0515** | **Panchayati Raj Programmes** | | | 101 | District Panchayat Programmes | 0 | 0 | 0 | 0 | 329519 | 329519 |
| 101 | District Panchayat | 0 | 3000 | 103 | Gram Panchayat Programmes | 0 | 0 | 0 | 235944 | 693189 | 929133 |
| 103 | Gram Panchayat | 0 | 4006541 | **2801** | **Rural Electrification** | | | | | | |
| **1601** | **Grants-in-aid** | | | 101 | Purchase of Power | 0 | 0 | 0 | 2405954 | 441357 | 2847311 |
| 101 | Grants from Central Government | 0 | 38093 | 103 | maintenance of Street Light | 0 | 0 | 0 | 0 | 81684 | 81684 |
| 102 | Grants from State Governemt | 0 | 3981355 | **3054** | **Transportation** | | | | | | |
| | | | | 101 | Roads | 0 | 0 | 0 | 0 | 12430 | 12430 |
| | | | | 102 | Culverts | 0 | 0 | 0 | 0 | 30450 | 30450 |
| | | | | **4215** | **Capital Outlay on Water Supply and** | | | | | | |
| | | | | | **Sanitation** | | | | | | |
| | | | | 101 | Laying of Water Supply Line | 0 | 0 | 0 | 0 | 81784 | 81784 |
| | | | | 102 | Drilling of Tube-well | 0 | 0 | 0 | 0 | 79487 | 79487 |
| | | | | **4702** | **Capital Outlay on Minor Irrigation** | | | | | | |
| | | | | 101 | Construction of Minor Irrigation Projects | 0 | 0 | 0 | 0 | 173332 | 173332 |
| | | | | **4801** | **Capital Outlay on Rural Electrification** | | | | | | |
| | | | | 102 | Capital Outlay on Construction of sub-station | 0 | 0 | 0 | 0 | 29250 | 29250 |
| | | | | 103 | Installation of Street light | 0 | 0 | 0 | 0 | 151560 | 151560 |
| **Total** | | 0 | 10079438 | **Total** | | 0 | 0 | 0 | 2641898 | 5751087 | 8392985 |

| Part-II | | | | Part-II | | | |
|---|---|---|---|---|---|---|---|
| RECEIPTS | | | | PAYMENTS | | | |
| HEADS OF ACCOUNT | | Budget Estimates (Rs.) | Amount (Rs.) | HEADS OF ACCOUNT | | Budget Estimates (Rs.) | Amount (Rs.) |
| 8011 | Insurance and Pension Fund | | | 8443 | Civil Deposit | | |
| 101 | Panchayat Employees Group Insurance Scheme | 0 | 103728 | 101 | Earnest money deposit | 0 | 13890 |
| 8443 | Civil Deposit | | | 103 | Panchayat Deposit | 0 | 30992 |
| | | | | | | | |
| 101 | Earnest money deposit | 0 | 34675 | | | | |
| 102 | Security Deposit | 0 | 18510 | | | | |
| Total | | 0 | 156913 | Total | | 0 | 44882 |
| | | | | Closing Balance<br>Cash in Hand:<br>Balance in Bank:<br>Balance in Treasury:<br>Balance in PostOffice: | | | <br>413749<br>8994718.8<br>0<br>0 |
| Grand Total | | | 17846334.8 | Grand Total | | | 17846334.8 |

அடுத்தது என்ன? நீங்க இந்தப் பயிற்சியை பெற்றுக் கொள்வதற்கான தகவல்கள் தான். நீங்கள் இந்தப் பக்கம் வரை வாசித்து வந்திருக்கிறீர்கள் என்றால் நிச்சயம் இந்தப் பயிற்சியை அல்லது இந்தத் தகவலையும் அறிந்து கொள்வீர்கள் என்றே நம்புகிறேன்.

## பயிற்சி

பயிற்சிக்கான கால அளவு **மூன்று முதல் ஐந்து நிமிடங்கள்.** ஏதேனும் ஒரு பஞ்சாயத்தின் நிதிநிலையை படித்தறிய 5 முதல் பத்து நிமிடங்கள். **அதிகபட்சமாக நீங்கள் செலவிட வேண்டியது 15 நிமிடங்களே.**

- தமிழில் இப்பயிற்சியைப் பெற இந்த முகவரியை பயன்படுத்தவும் https://youtu.be/ql25V7MaP0w
- To understand how to access our Panchayath Financial Status please use following video https://youtu.be/_2WqU3jMHbA
- Link To The Manual : http://bit.ly/IU360en
- More Videos : http://bit.ly/IU360Videos
- More Useful Video : http://bit.ly/IU360HowToVideo

### Course Completion Forms / பயிற்சி நிறைவுப் படிவம்

- For Individuals : http://bit.ly/360CompletionFormIn
- For Non-Individuals* : http://bit.ly/360CompletionFormTGO

*Non-Individuals => Trainers, Groups, Organizations, Institutions can use this form

# கல்விக்கு உதவலாமே !

அன்புடையீர்,

உங்கள் அனைவருக்கும் எனது இதயம் கனிந்த வணக்கங்களும் வாழ்த்துக்களும். தொடர்ந்து வாசித்து ஆதரவளித்து வருவதற்கு நன்றி.

இந்த வார்த்தைக் கோர்வைகள் உங்களுக்கு பிடித்திருந்தால்..

**உங்களிடம் ஒரு விண்ணப்பத்தை வைக்கிறேன், அது மிகவும் முக்கியமானது மற்றும் அவசியமானது. இன்றைய சூழலில் கல்வியின் அவசியத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். தற்சமயம் இந்த வரிகளை நான் எழுதி முடிப்பதை சாத்தியப்படுத்தியதும், நீங்கள் வாசித்துக் கொண்டிருப்பதற்கும் அதுவே காரணம், அத்தகைய அடிப்படை பலன் அனைவருக்கும் கிடைத்திட வேண்டுமென நீங்கள் கருதினால்..**

- **குறைந்தது ஏதேனும் ஒரு அரசுப்பள்ளி மாணவனுக்கோ / மாணவிக்கோ அவர்கள் படிப்புக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவிடுங்கள்**
- **ஏதேனும் ஒரு ஏழை மாணவனுக்கோ / மாணவிக்கோ கல்லூரியில் படிக்க உதவிடுங்கள்**
- **உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அரசுப்பள்ளி மாணவ – மாணவியருக்கு ஏதேனும் ஒரு வகையில் வழிகாட்டிடுங்கள்**
- **அரசுப் பள்ளிகள் மேலும் சிறப்பாக செயல்பட எந்த வகையிலேனும் உதவிடுங்கள்**

மேற்கூறிய வேண்டுகோள்கள் நிறைவேற்றப்பட வேண்டியவை எனக் கருதினால் தொடர்ந்து பலரிடமும் இந்த வேண்டுகோளை நீங்களும் பகிர்ந்து கொள்ளுங்கள்!

படைப்புகள் பற்றிய உங்கள் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் எண்ணங்கள் என்னை வந்து சேர இந்த மின்னஞ்சல் முகவரியை பயன்படுத்தவும்.

karuveli.mahendran@gmail.com

தங்கள் ஆதரவுக்கு மீண்டும் நன்றி!

அன்புடன்

கருவெளி ராச.மகேந்திரன்

# இணைந்திருக்க சில வழிகள்

https://www.karuveli.wordpress.com | மின்னஞ்சல் : karuveli.mahendran@gmail.com

http://bit.ly/KaruveliCreativesLocation

கைபேசி எண் : 94455 28556 | படைப்புகளை உங்கள் மின்னஞ்சலில் பெற்றிட ஒரு முறை பதிவு செய்து கொண்டால் போதுமானது. https://goo.gl/LC2dTD

**யூ– டியூப் சேனல்கள்:**

Karuveli RaSa. Mahendran : https://goo.gl/pSYy8Y

Umaikalin Kural : https://goo.gl/qXn34p

Karueli Musicaa : https://goo.gl/v33JY9

# உதவிட விரும்பினால்

நீங்கள் உதவ விரும்பியும் உங்களால் சரியான மாணவரையோ, பள்ளியையோ, தேவைப்படும் நபர்களையோ கண்டறிய இயலாமல் போனால் என்னைத் தொடர்பு கொள்ளவும். என்னால் இயன்றவரை என்னிடமுள்ள தகவல்களை பகிர்கிறேன்.

விலையின்றி அனைவரும் படிக்கவும் பகிரவும் வழிவகுக்கும் "கிரியேட்டிவ் காமன்ஸ்" உரிமம் மூலமாக தொடர்ந்து பல படைப்புகளை வெளியிடும் இந்த முயற்சிக்காக நீங்கள் உங்கள் பங்களிப்பை செய்திட விரும்பினால், எனது வங்கிக் கணக்கு விபரங்களை பின்வரும் முகவரியில் பெற்றிடுங்கள். இது, **முழுவதும் உங்கள் சுய விருப்பத்தின் அடிப்படையில் செய்யப்படும் பங்களிப்பாக இருக்க வேண்டும் என்பது எனது மனமார்ந்த வேண்டுகோள்.** *நேர் வழியில் / நியாயமான முறையில் சம்பாதிக்காத பணம் எதையும் அனுப்ப வேண்டாம் என்றும் வேண்டிக் கொள்கிறேன்.*

நன்கொடையளிக்க விரும்புவோர் இங்கே சொடுக்கவும்

அல்லது இந்த முகவரியை பயன்படுத்துங்கள் http://bit.ly/Donate2Karuveli

*அன்புடனும் வாழ்த்துகளுடனும்*

*கருவெளி ராச. மகேந்திரன்*

# என்னைப் பற்றி

மேற்குத் தொடர்ச்சி மலையின் பிரமாண்டத்தை தினந்தோறும் இரசிக்க வாய்ப்பிருக்கும், இவ்வுயிர் அழிந்தால் ஐந்தாறு ஆண்டுகளில் மனித இனம் அழிந்து போகுமென்ற புகழ் பெற்ற உயிரின் பெயர் கொண்ட ‘‘தேனி’’யில் வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்கு பெற்றோரால் வைக்கப்பட்ட பெயர் மகேந்திரன். எனக்கு விபரம் தெரிந்து, என் தேடல் துவங்கிய நாள் முதலாய், எனது எழுத்துகள் மூலம் நான் பதிவு செய்யத் துவங்கிய நாள் முதலாய் கரு = ஆதியானது, வெளி = எல்லையற்றது, என்ற இரு சொற்களை இணைத்து ‘‘கருவெளி’’ அத்துடன் என் பெற்றோர் பெயரின் முதல் எழுத்துக்களை இணைத்து ‘‘கருவெளி’’ ராச. மகேந்திரன் என்ற பெயரில் எழுதி வருகிறேன்.

ஏறக்குறைய 15 ஆண்டுகள் காற்றாலை நிறுவனங்களில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி துறை, செயல்திறன் கண்காணிப்பு மற்றும் மேலாண்மை துறைகளில், பல்வேறு மட்டங்களில் பணியாற்றி விட்டு தற்சமயம் முழு நேரம் எழுத்துப் பணியோடு, கிராமப்புற மாணவ மாணவியர், அரசுப்பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்கு என்னாலான அறிவுப்பகிர்வைச் செய்து கொண்டிருக்கிறேன்.

மிகச் சமீபத்தில் கற்றுக் கொண்ட ஒலி, ஒளி மற்றும் இசை சம்பந்தமான அறிவினை சமூகத்திற்கு பயனளிக்கும் வகையில் பல வடிவங்களில் கொண்டு வரும் முயற்சியை துவங்கி உள்ளேன். தற்சமயம் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க, கவிதைகள் அனுபவப் பகிர்வுகளுக்காக ‘‘கருவெளி ராச.மகேந்திரன்’’, பொது மக்களுக்குப் பயன்படும் அரசு மற்றும் அரசு சார் தகவல்களை பகிர்ந்திட ‘‘ஊமைகளின் குரல்’’ மற்றும் இசைக்காக ‘‘கருவெளி மியூசிக்கா’’ எனும் மூன்று யூடியூப் சேனல்களையும் ஆரம்பித்து தகவல்களை பரிமாறி வருகிறேன்.

மேலும் பல முயற்சிகளை சமூக பங்களிக்கும் வகையில் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் இயற்கையோடு என் வாழ்க்கை பயணம் தொடர்கிறது. உங்களைப் போலவே என்னைப் பற்றி நானும் அறிந்து கொள்ள நிறைய விசயங்கள் இருக்கின்றன. வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

*அன்புடன் – கருவெளி ராச.மகேந்திரன்*

## எனது சில படைப்புகள் : (மார்ச் 2019 நிலவரப்படி)

**இதுவரை :**

### *அமேசானில் கிடைக்கக்கூடிய தலைப்புகள்*

1. நாலு சொல்லில் – தொகுப்பு 1 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
2. நாலு சொல்லில் – தொகுப்பு 2 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
3. நிலவும் நீயும் நானும் – தொகுப்பு 1 | கவிதைத் தொகுப்பு
4. நிலவும் நீயும் நானும் – தொகுப்பு 2 | கவிதைத் தொகுப்பு
5. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியான அனுபவம் பற்றியது)

### *இலவசமாக வெளியிடப்பட்டுள்ள தலைப்புகள்*

1. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியான அனுபவம் பற்றியது)
2. என் மரணம் – சிறுகதை | உண்மைச் சம்பவம்
3. மக்களட்சியில் என் கடைசிப் பயணம் சிறுகதை | உண்மைச் சம்பவம்
4. குற்றால வலி(ழி) – சிறுகதை | உண்மைச் சம்பவம்
5. தீட்டு – சிறுகதை | உண்மைச் சம்பவம்
6. நிலவும் நீயும் நானும் – தொகுப்பு 3 | கவிதைத் தொகுப்பு
7. அவளோடு ஒரு பயணம் – கவிதைத் தொகுப்பு ( மீ டூ )
8. நிலவும் நீயும் நானும் – தொகுப்பு 4 | கவிதைத் தொகுப்பு
9. இந்திய ஒன்றியம் 360 | சிறுகதை | உண்மைச் சம்பவம்

### *தற்போது எழுதிக் கொண்டிருப்பவை :*

1. மரணப் பிடியிலிருந்து – சிறுகதைகள் – 2019
2. நிலவும் நீயும் நானும் – தொகுப்பு 5 | கவிதைத் தொகுப்பு – 2019
3. அவனோடு ஒரு பயணம் – கவிதைத் தொகுப்பு – 2019
4. பாட்டில்க்காரன் | சிறுகதை –2019
5. இராக்காவலன் | சிறுகதை –2019

(2019 ல் மட்டும் குறைந்தது 12 வெளியீடுகள் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது)

### *ஒலிப் புத்தகங்கள் :*

1. நாலு சொல்லில் – ஒலிப் புத்தகம் பகுதி 1 – நவம்பர் 2018 (மறு வெளியீடு)
2. நாலு சொல்லில் – ஒலிப் புத்தகம் – டிசம்பர் 2018 (மறு வெளியீடு)

## காணொளிக் கவிதைகள் :

1. நாலு சொல்லில் – முழுத் தொகுப்பு ( யூடியூப் சேனலில் உள்ளது)

2. நிலவும் நீயும் நானும் – தொகுப்புகள் 1,2,3… என அனைத்தும் விரைவில் நீங்கள் கேட்டு மகிழ வெளியிடத் திட்டமிடப்பட்டுள்ளன

3. கண்களை மூடிப் பார் – புத்தகமும் என்னுடைய அனுபவப் பகிர்வுடன் விரைவில் வெளியிடப்படும்.

## *The Voice Of Karuveli – Podcast launched*

**1.** "The Voice Of Karuveli" podcast launched, here I'm start sharing my poems, stories, social activities and wind industry professional experience, inner journey experience (Meditation), Social challenges and solutions. The content of these podcast mostly in Tamil and English language. You can hear my podcasts at https://anchor.fm/karuveli Soon it'll be available at every podcast providing platforms. தி வாய்ஸ் ஆஃப் கருவெளி மூலமாக எனது அனுபவங்களையும், கவிதைகளையும், கதைகளையும், சமூகப் பிரச்சனைகளையும் தீர்வுகளையும், தியான அனுபவங்கள் குறித்தும் தமிழிலும் ஆங்கிலத்திலும் பகிர்கிறேன். நீங்கள் இதனை கேட்டு மகிழ மேற்குறிப்பிட்டுள்ள முகவரியை பயன்படுத்தலாம். இன்னும் பல தளங்களிலும் இந்த ஒலி வடிவம் கிடைக்க முயற்சிகள் எடுத்து வருகிறேன்.

## இசை வெளியீடுகள் :

1. Where I am Going – ஏப்ரல் 2018

2. EDM 1.0 – ஜீன் 2018

3. So Easy – அக்டோபர் 2018

4. Protect Me – நவம்பர் 2018

5. The Inner Journey– Series – டிசம்பர் 2018

6. The Restless

7. The Nameless Series – 2019 Weekly Music Series (வாரம் ஒரு இசைக் கோர்வையை கேட்டு மகிழுங்கள்) – வெற்றிகரமான பத்து வாரங்களை கடந்து பயணிக்கிறது

## புதிய நம்பிக்கைத் தொடர் :

**அனைவருக்கும் பயன்படும் வகையில் "நீஉமுமூ" / "NUMM" எனும் புதிய நம்பிக்கைத் தொடர் காணொளித் தொடராக துவங்கப்பட்டுள்ளது.** இது மும்மைத் தத்துவத்தின் அடிப்படையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இவை அத்தனையும் நடைமுறை வாழ்க்கையின் அடிப்படையில் உருவாக்கப்படுகின்றன. மாதத்திற்கு இரு காணொளிகள் எனத் திட்டமிடப்பட்டுள்ளது.

## இலவச பயிற்சி வகுப்புகள்

வாழ்வின் பல்வேறு நிலைகளிலிருக்கும் மக்களுக்கான பயிற்சி வகுப்புகள் தேனியில் துவங்கப்பட்டுள்ளன. இதுவரை **60 பயிற்சிகள்** பட்டியலிடப்பட்டுள்ளன. விரைவில் இது குறித்த மேலும் அறிய. http://bit.ly/KKtraining

## மக்களாட்சியில் மக்கள் விழிப்புணர்வு, பங்கேற்ப்பு

நம் தலை எழுத்தை நாம் தான் தினந்தோறும் எழுதிக் கொண்டிருக்கிறோம் இந்த மக்களாட்சியில் அதனை மக்கள் உணர்ந்து அதில் பெறும் பங்களிப்பு செய்யும் விதமாக "**தேனி 360**", திட்டம் துவங்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் படி வரும் 2030 க்குள் தேனி மாவட்டத்தில் மட்டும் சுமார் நான்கு லட்சம் பேருக்கு பயிற்சியளிக்கத் திட்டமிட்டுள்ளேன். அதுவும் பயிற்சி பெற்ற அனைவரும் அவரவர் கிராம, நகர, மாநகர பஞ்சாயத்தின் ஆண்டு வருமானம் மற்றும் செலவு விபரங்களே தாங்களே அறிந்து பயன்படுத்துவதற்கான திறன் பெற்றவர்களாக இருப்பார்கள். இது தவிர 60 பயிற்சிகளும் பட்டியலிடப்பட்டுள்ளன. இத்திட்டம் "தமிழ்நாடு 360" மற்றும் "இந்திய ஒன்றியம் 360" என விரிவாக்கம் செய்யவும் திட்டமிடப்பட்டுள்ளது. தேனியில் பயிற்சி வகுப்புகள் துவங்கி விட்டன. பல பகுதிகளுக்கும் விரிவாக்கம் செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது. இத்திட்டத்தில் இணைந்து செயலாற்ற விரும்பும் அனைவரையும் அன்போடு வரவேற்கிறேன். மேலும் பல விபரங்களோடு உங்களை சந்திக்கிறேன்.

இங்கு பட்டியலிடா பல பணிகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்பதையும் உங்களோடு பகிர்ந்து கொள்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.



# இந்திய ஒன்றியம் 360

நிகழ்வு கதையாக
கதை நிகழ்வாக
நிகழ்ந்து கொண்டிருக்கும்
இந்த உண்மைச் சம்பவத்தை
உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.
வாருங்கள் இணைந்து

நம் வரலாற்றை
நம் கைகளால் எழுதுவோம்

கருவெளி ராச.மகேந்திரன்

கருவெளி கலையகம் வெளியீடு
94455 28556